இ-ள். பசி வந்திட - பசிநோய் ஒன்று மாத்திரம் வந்தால்,—மானம் - மானமும்,—குலம் - குலமும்,—கல்வி - கல்வியும்,—வண்மை - வாய்மையும்,—அறிவுடைமை - அறிவுடைமையும்,—தானம் - கொடையும்,—தவம் - தவமும்,—உயர்ச்சி - உயர்வும்,—தாளாண்மை - தொழின் முயற்சியும்,—தேனின் கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் - தேன் பெருக்குப்போலத் தோன்றுகின்ற சொல்லையுடைய மங்கையர் மேல் ஆசை வைத்தலும் ஆகிய,—பத்தும் பறந்து போம் - இப்பத்தும் விட்டோடிப்போம். எ - று.

இ-ம். மான முதலிய எல்லா நலங்களையுங் கெடுத்தலினாலே பசிநோயினுங் கொடியது பிறிதில்லை. எ-ம். உ௬

ஒன்றை நினைக்கி னதுவொழிந் திட்டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கும்
எனையாளு மீசன் செயல்.

இ-ள். ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு ஒன்று ஆகும் - ஒருபொருளைப் பெற நினைந்தால், அப்பொருள் கிடையாமல் வேறொரு பொருள் கிடைத்தாலும் கிடைக்கும்;—அன்றி அதுவரினும் வந்து எய்தும் - அப்படியல்லாமல் அப்பொருளே வந்து கிடைத்தாலும் கிடைக்கும்;—ஒன்றை நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும் - (இன்னும்) ஒரு பொருளை நினையாதிருக்கு முன்னே அது தானே வந்து நின்றாலும் நிற்கும்;—எனை ஆளும் ஈசன் செயல் - (இவைகளெல்லாம்) என்னை ஆண்டருளும் கடவுளுடைய செய்கைகளாகும். எ - று.

இ-ம். இருவினைகளுக்கீடாக இன்பத் துன்பங்களை ஊட்டும் கடவுளுடைய கருத்தின்படியேயன்றி ஆன்மாக்களுடைய கருத்தின்படி ஒன்றும் நடவாது. எ-ம். உ௭

உண்பது நாழி யுடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன—கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையுஞ் சஞ்சலமே தான்.

இ-ள். கண்புதைந்த மாந்தர் - அகக்கண் குருடாக இருக்கின்ற மனிதர்,—உண்பது நாழி - உண்பது ஒருநாழியரிசியன்னமேயாம்;—உடுப்பது நான்கு முழம் - (அவர்) உடுப்பது நான்குமுழ வஸ்திரமேயாகும்; (இப்படியாகவும்),—நினைந்து எண்ணுவன எண்பதுகோடி - (அவர்) நினைத்து எண்ணுங் காரியங்களோ எண்பது கோடியாகும். (ஆதலினால்),—மண்ணின் கலம்போலச் சாம் துணையும் குடிவாழ்க்கை சஞ்சலமே - மட்பாத்திரம் அழிந்தாற்போல (அவர் சரீரம்) அழியும் வரையும் (அவருடைய) குடிவாழ்க்கையினாலே துன்பமே விளையும். எ-று. தான் அசை.

இ-ம். உள்ளதே போதும் என்று திருப்தி அடையாதவர் சாந்துணையும் அடைவது துன்பமேயன்றிப் பிறிதில்லை. எ-ம். உஅ

மரம்பழுத்தால் வெளவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவருமங் கில்லை—சுரந்தமுதங்
கற்றா தரல்போற் கரவா தளிப்பரேல்
உற்றா ருலகத் தவர்.

இ-ள். மரம் பழுத்தால் - மரம் பழுத்திருந்தால்,—வா என்று வெளவாலைக் கூவி இரந்து அழைப்பார் அங்கு யாவரும் இல்லை - (இப்பழத்தைத் தின்னுதற்கு) வா என்று வெளவாலைக் கூவி வேண்டி அழைப்பவர் அம் மரத்தருகில் ஒருவரும் இல்லை;—கன்று ஆ அமுதம் சுரந்து தரல்போல் கரவாது அளிப்பரேல்,—கன்றையுடைய பசுவானது பாலைச் சுரந்து கொடுத்தல்போல ஒளிக்காமல் (தம்மிடத்துள்ள பொருள்

களைக்) கொடுப்பாராயின்,—உலகத்தவர் உற்றார் - உலகத்தார் (அவ்வெளவால்போலத் தாமே வந்து) உறவினராவார். எ - று.

இ-ம். கொடையாளருக்கு எல்லாரும் தாமே உறவினராவார். எ-ம்.

தாந்தாமுன் செய்தவினை தாமே யநுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே
ஒறுத்தாரை யென்செயலா மூரெல்லா மொன்று
வெறுத்தாலும் போமோ விதி.

இ - ள். வேந்தே - அரசனே,—முன் தாம் தாம் செய்த வினை - முற்பிறப்பிலே தாம் தாம் செய்த நல்வினை தீவினை களை,—பூந் தாமரையோன் பொறி வழியே தாமே அநுபவிப் பார் - தாமரைமலரில் இருக்கின்ற பிரமா விதித்தபடியே தாமே அநுபவிப்பார்கள்;—ஒறுத்தாரை என் செயலாம் - (தீவி னையினலே தூண்டப்பட்டுத்) தீங்கு செய்தவரை நாம் யாது செய்யலாம்;—ஊர் எல்லாம் ஒன்று வெறுத்தாலும் விதி போமோ - ஊரிலுள்ளார் எல்லாருந் (துணையாகத்) திரண்டு வெறுத்தாலும் விதி போகுமோ (போகாது.) எ - று.

இ-ம். தமக்கு ஒருவன் துன்பஞ் செய்யின், அது தாம் முன் செய்த தீவினைக் கீடாகக் கடவுளாலே தமக்குக் கிடைத்ததென்று அமைவதே அறிவு. எ-ம். ௩0

இழுக்குடைய பாட்டிற் கிசைநன்று சாலும்*
ஒழுக்க முயர்குலத்தி னன்று—வழுக்குடைய
வீரத்தி னன்று விடாநோய் பழிக்கஞ்சாத்
தாரத்தி னன்று தனி.

இ - ள். இழுக்கு உடைய பாட்டிற்கு இசை நனறு - இலக்கண வழுக்களையுடைய செய்யுளினும் இசை நல்லது,—

*சால எனப் பாடமோதுவாருமுளர்.

உயர் குலத்தின் சாலும் ஒழுக்கம் நன்று - உயர்வாகிய குலத்தினும் மாட்சிமைப்பட்ட ஒழுக்கம் நல்லது;—வழுக்கு உடைய வீரத்தின் விடா நோய் நன்று - தவறுதலையுடைய வீரத்தினும் தீரா வியாதி நல்லது;—பழிக்கு அஞ்சாத் தாரத்தின் தனி நன்று - பழிச் சொல்லுக்கு அஞ்சாத மனைவியோடு கூடி வாழ்தலினும் தனியே இருத்தல் நல்லது. எ - று.

இ-ம். இலக்கணப் பிழையுடைய பாட்டும், நல்லொழுக்கமில்லாத உயர்குலமும், தவறுதலடையும் வீரமும், கற்பில்லாத மனைவியோடு கூடிய இல்வாழ்க்கையுந் தீரா வசையை விளைவிக்கும். எ-ம். ௬௧

ஆறிடு மேடு மடுவும்போ லாஞ்செல்வம்
மாறிடு மேறிடு மாநிலத்தீர்—சோறிடுந்
தண்ணீரும் வாருந் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறு முயர்ந்து.

இ - ள். மா நிலத்தீர் - பெரிய பூமியிலுள்ளவர்களே,—ஆறு இடும் மேடும் மடுவும் போல் - ஆற்று வெள்ளத்தினல் உண்டாக்கப்படும் மேடும் பள்ளமும்போல,—செல்வம் ஏறிடும் மாறிடும் - செல்வம் வளர்வதும் தேய்வதுமாய் இருக்கும். (ஆதலினல்),— சோறு இடும் - (இரப்பவருக்கு உண்ண) அன்னத்தை இடுங்கள்;—தண்ணீரும் வாரும் - (குடிக்கச்) சலத்தையும் வாருங்கள்,—தருமமே சார்பு ஆக உள் நீர்மை உயர்ந்து வீறும் - (இப்படிச்செய்து வருவீர்களானல்,) இந்தத் தருமமே துணையாக உள்ளத்திலே (சுத்தியாகிய) தன்மை ஓங்கி விளங்கும். எ - று. ஆம் அசை.

இ-ம். நிலையில்லாத செல்வம் உள்ளபொழுதே இரப்பவர்களுக்கு அன்னபானீயங்களைக் கொடுக்கிற் சித்தசுத்தி உண்டாகும். எ-ம். ௬௨

வெட்டெனவைமெத்தெனவைவெல்லாவாம்வேழத்திற்
பட்டுருவுங் கோல்பஞ்சிற் பாயாது—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும்.

இ-ள். வேழத்தில் பட்டு உருவும் கோல் பஞ்சில் பாயாது- (வலிய) யானையின்மேலே பட்டுருவும் அம்பானது (மெல்லிய) பஞ்சின்மேலே பாயாது. (அதுபோல),—வெட்டெனவை மெத்தெனவை வெல்லா-வலிய சொற்கள் மெல்லிய சொற்களை வெல்லமாட்டா.—நெடு இருப்புப் பாரைக்கு நெக்கு விடாப் பாறை-நெடுமையாகிய இருப்புப் பாரைக்குப் பிளவாத கருங் கற்பாறையானது,—பசு மரத்தின் வேருக்கு நெக்கு விடும்-பச்சை மரத்தின் வேருக்குப் பிளந்து போம். எ-று. ஆம் அசை.

இ-ம். வன்சொல்லே இன்சொல்லுக்குத் தோற்றுப் போம். எ-ம். கக.

கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாண்மற் றீன்றெடுத்த தாய்வேண்
செல்லா தவன்வாயிற் சொல். [டாள்

இ-ள். கல்லானே ஆனாலும் கைப்பொருள் ஒன்று உண்டாயின்-(ஒருவன்) படியாதவனே யாயினும் (அவன்) கையிலே பொருண்மாத்திரம் இருந்தால்,—எல்லாரும் சென்று எதிர் கொள்வர்-(அவனை) யாவரும் போய் எதிர்கொண்டு உபசரிப்பர்;—இல்லானை இல்லாளும் வேண்டாள்-(படித் தவனேயாயினும் பொருள்) இல்லாதவனை (அவன்) மனைவியும் விரும்பாள்;—ஈன்று எடுத்த தாய் வேண்டாள்-(அவனைப்) பெற்று வளர்த்த மாதாவும் விரும்பாள்;—அவன் வாயில்

சொல் செல்லாது - அவன் வாயிற் பிறக்குஞ் சொல்லானது பயன் படாது. எ - று. அங்கு, மற்று அசை.

இ-ம். கல்லாதவனேயாயினும் பொருளுடையவனை எல்லாரும் மதிப்பர்; கற்றவனேயாயினும் பொருளில்லாதவனை ஒருவரும் மதியார். எ-ம். ௬௪.

பூவாதே காய்க்கு மரமுமுள மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே—தூவா
விரைத்தாலு நன்றாகா வித்தெனவே பேதைக்
குரைத்தாலுந் தோன்றா துணர்வு.

இ - ள். பூவாதே காய்க்கும் மரமும் உள - பூவாமலே காய்க்கின்ற மரங்களும் உண்டு. (அதுபோல),—மக்களுளும் ஏவாதே நின்று தாம் உணர்வார் உளர் - மனிதர்களுள்ளும் ஏவாமலே இருந்து தாமே அறிந்து செய்யவல்லவரும் உண்டு.—தூவா விரைத்தாலும் நன்று ஆகா வித்து என - தூவி விரைத்தாலும் முளைத்துப் பயன்படாத விதைபோல,—பேதைக்கு உரைத்தாலும் உணர்வு தோன்றாது - மூடனுக்கு (எடுத்து விளங்கச்) சொன்னாலும் (அதனை அறியும்) அறிவு (அவனிடத்து) உண்டாகாது. எ - று.

இ-ம். குறிப்பறிந்து செய்வோரே அறிவுடையோர்; அறிவிக்கவும் அறிந்து செய்யாதவர் மூடர். எ-ம். ௬௫

நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்திற்
கொண்ட கருவளிக்குங் கொள்கைபோல்—ஒண்
போதந் தனங்கல்வி பொன்றவருங் காலமயல் [டொடி
மாதர்மேல் வைப்பார் மனம்.

இ - ள். ஒள் தொடி - ஒள்ளிய வளையலை அணிந்தவளே,—நண்டு சிப்பி வேய் கதலி - நண்டும் சிப்பியும் மூங்கிலும் வாழை

யும்,—நாசம் உறும் காலத்தில் - தாம் அழிவை அடையுங் காலத்திலே,—கொண்ட கரு அளிக்கும் கொள்கை போல் - (முறையே தாம்) கொண்ட (குஞ்சும் முத்தும் அரிசியும் காய்க் குலையும் ஆகிய கருக்களை ஈனுந்தன்மைபோல, (மனிதர்கள்),—போதம் தனம் கல்வி பொன்ற வரும் காலம் - ஞானமும் செல்வமும் வித்தையும் அழியவருங் காலத்திலே,—அயல் மாதர் மேல் மனம் வைப்பார் - பிறர் மனைவியர் மேல் மனம் வைப்பார்கள். எ - று.

இ-ம். ஒருவன் பிறன் மனையாளை இச்சிக்கின், அது அவனிடத்துள்ள ஞானம் செல்வம் கல்வி என்னும் மூன்றுங் கெடுதற்கு அறி குறியாகும். எ-ம்.

கூசு

வினைப்பயனை வெல்வதற்கு வேத முதலாம்
அனைத்தாய நூலகத்து மில்லை—நினைப்பதெனக்
கண்ணுறுவ தல்லாற் கவலைபடே னெஞ்சேமெய்
விண்ணுறுவார்க் கில்லை விதி.

இ - ள். வேதம் முதலாம் அனைத்து ஆய நூலகத்தும் - வேத முதலாகிய எல்லா நூல்களினுள்ளும் (ஆராய்ந்தால்),—வினைப்பயனை வெல்வதற்கு - இருவினைப்பயனை வெல்வதற்கு (உபாயம்),—அது நினைப்பு எனக் கண்ணுறுவது அல்லால் இல்லை - அவ் வினைப்பயன் (நம்முடைய) நினைவாலாவது என்று அறிவதல்லாமல் வேறு இல்லை.—நெஞ்சே கவலை படேல் - மனமே, கவலையை அடையாதே,—மெய் விண் உறுவார்க்கு விதி இல்லை - நித்தியமாயுள்ள ஞானாகாசமாகிய பதியோடு கலந்து நிற்பவருக்கு ஊழ் இல்லை. எ - று.

இ-ம். பரஞானத்தினாலே பதியைத் தெளிந்து நோக்கி அன்பு செய்யப்பெற்றவர் அப் பதியையே யன்றிப் பிராரத்தவாசனை தாக்குதற்குரிய மற்றைப்பதார்த்தங்களைச் சிறிதும் காணாராகலின், அவருக்கு விதி இல்லை, எ-ம்,

கூஎ

நன்றென்றுந் தீதென்று நானென்றுந் தானென்றும்
அன்றென்று மாமென்று மாகாதே—நின்றநிலை
தானதாந் தத்துவமாஞ் சம்பறுத்தார் யாக்கைக்குப்
போனவா தேடும் பொருள்.

இ-ள். நன்று என்றும்-(இது) நல்லது என்றும்,—தீது என்றும்-(இது) தீயது என்றும்,—நான் என்றும்-(இது செய்தவன்) நான் என்றும்,—தான் என்றும்-(இது செய்தவன்) அவன் என்றும்,—அன்று என்றும்-(இது) அன்று என்றும்,—ஆம் என்றும்-(இது) ஆகும் என்றும்,—ஆகாதே நின்ற நிலை-பேதஞ்செய்யாமலே (பதியினுள் அடங்கி இரண்டறக் கலந்து) நின்ற நிலையே,—தான் அது ஆம் தத்துவம் ஆம்-(ஆன்மாவாகிய) தான் (பதியாகிய) அதுவாகுகின்ற உண்மை நிலையாகும்.—சம்பு அறுத்தார் யாக்கைக்குத் தேடும் பொருள் போனவா-சம்பை அறுத்தவர் அதனைக்கட்டுதற்குத் தேடும் பொருள் அதுவன்றி வேறில்லாமற் போனவாறுபோலப் பாசத்தின் வேறாகக் காணப்பட்ட தன்னைப் பதியினுள்ளே அடக்குதற்குத் தேடும் பொருள் தானன்றி வேறில்லை. எ-று.

இ-ம். ஆன்மாப் பதியின் வேறாயினும் கண்ணொளியும் சூரியனொளியும்போல வேற்றுமை சிறிதுந் தோன்றா வண்ணம் ஒற்றித்து நிற்கும் நிலையே தான் அதுவாதலாகிய உண்மை நிலை. எ-ம். ௩௮.

முப்பதா மாண்டளவின் மூன்றற் றொருபொருளைத்
தப்பாமற் றன்னுட் பெறாவிற்—செப்புங்
கலையளவே யாகுமாங் காரிகையார் தங்கள்
முலையளவே யாகுமா மூப்பு.

இ - ள். முப்பது ஆம் ஆண்டு அளவில் - முப்பது வயதி னளவிலே,—மூன்று அற்று - (மலம் மாயை கருமம் என்னும் பந்தம்) மூன்றும் நீங்கி,—ஒருபொருளைத் தப்பாமல் தன்னுள் பெறுன் ஆயின் - ஒப்பில்லாத முதற் பொருளாகிய பதியைத் தவருமல் தன்னுள்ளே (அநுபூதி ஞானத்தினுல் ஒருவன்) அடையானுயின்,—செப்பும் கலை அளவே ஆகும் - (அம்முதற் பொருள் அவனுக்கு அவன்) கற்ற சாத்திர ஞானத்தினளவே யாகும்;—மூப்புக் காரிகையார் தங்கள் முலை அளவே ஆகும் - (அவன் பின் வரும்) முதுமைப் பருவத்திலே (தான் கண்ட) பெண்களுடைய தனத்தினளவாகவே (தளர்ச்சியுடையவன்) ஆவன் (ஆதலால்.) ஏ - று. ஆம் இரண்டும் அசை.

இ-ம். அநுபூதிஞானம் நிட்டையினுலல்லது பெறப்படாமை யாலும், நிட்டை உடம்பும் அறிவும் தளர்ச்சியடையும் முதுமைப் பருவத்திற் சித்திக்கமாட்டாமையாலும், ஞானசாரியரை அடைந்து ஞான சாத்திரங்களைக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகூடல் என்னும் நான்கையும் இளமைப் பருவத்திற்றுனே செய்தல் வேண்டும். எ-ம்.

௩௧

தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழு முனிமொழியுங்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.

இ - ள். தேவர் குறளும் - திருவள்ளுவநாயனுருடைய திருக்குறளும்,—திரு நான்மறை முடிவும் - சிறப்புப் பொருந்திய நான்கு வேதங்களின் முடிவாகிய உபநிடதங்களும்,—மூவர் தமிழும் - (திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் திருநாவுக்கரசு நாயனுர் சுந்தரமூர்த்திநாயனுர் என்னும் சமயகுரவர்) மூவர்களுடைய (தேவாரமாகிய) தமிழ்வேதமும்,—முனி மொழியும் -

வியாச முனிவருடைய வேதாந்த சூத்திரமும்,—கோவை திருவாசகமும் - (திருவாதவூரடிகளுடைய) திருக்கோவையார் திருவாசகங்களும்,—திருமூலர் சொல்லும் - திருமூலநாயனுருடைய திருமந்திரமும்,—ஒரு வாசகம் என்று உணர் - ஒரு பொருளையே குறித்த வாக்கியங்களென்றுநீ அறிவாயாக எ-று.

இ-ம். திருக்குறண் முதலிய நூல்களெல்லாம் வேறு வேறு வாக்கியங்களாகத் தோன்றினும், பதிலக்கணமும் பசுலக்கணமும் பந்தலக்கணமும் முத்திலக்கணமும் ஆகிய இவைகளை ஒருதன்மையாகவே அறிவிக்கும் நூல்களாம். எ-ம். சல

உபநிடதமெனினும், வேதாந்தமெனினும், வேதசிரசெனினும், பிரபலசுருதியெனினும் பொருந்தும். வேதாந்த சூத்திர* மெனினும், பிரமமீமாஞ்சையெனினும், உத்தரமீமாஞ்சையெனினும் பொருந்தும்.

## நல்வழியுரை முற்றிற்று.

---

*வேதாந்தசூத்திரத்துக்கு நீலகண்டசிவாசாரியர், சங்கராசாரியர், இராமாநுஜாசாரியர், மத்துவாசாரியர் என்னும் நால்வர் பாஷியங்கள் செய்தனர். சைவர்களாற் கொள்ளப்படுவது நீலகண்டபாஷியம்; ஸ்மார்த்தர்களாற் கொள்ளப்படுவது சங்கரபாஷியம்; வைஷ்ணவர்களாற் கொள்ளப்படுவது இராமாநுஜபாஷியம்; மாத்துவர்களாற் கொள்ளப்படுவது மத்துவபாஷியம்.

குறிப்பு.*இச்சூத்திரத்திற்கு இப்பாஷியங்களன்றி இன்னும் பல வுள. அவை:—போதாயன முனிவர் முதலியோர் இயற்றிய போதாயன விருத்தி முதலியன.

துறைமங்கலம்
சிவப்பிரகாசசுவாமிகள்
அருளிச்செய்த

# நன்னெறி

## மூலமும் உரையும்



## காப்பு

மின்னெறி சடாமுடி விநாயக னடிதொழ
நன்னெறி வெண்பா நாற்பதும் வருமே.

இதன்பொருள். மின் எறி சடா முடி விநாயகன் அடி தொழ - மின்னொளியை வீசுகின்ற சடாமுடியையுடைய விநாயகக் கடவுளுடைய திருவடிகளை வணங்கினால்,—நன்னெறி வெண்பா நாற்பதும் வரும் - நன்னெறி என்னும் நூலில் உள்ள நாற்பது வெண்பாவும் வரும். என்றவாறு. ஏ ஈற்றசை.

இதனது தாற்பரியம். விநாயக வணக்கஞ்செய்யின், நன்னெறி என்னும் நூல் இடையூறின்றி இனிது முடியும் என்பதாம்,



என்று முகம னியம்பா தவர்கண்ணுஞ்
சென்று பொருள்கொடுப்பர் தீதற்றோர்—துன்றுசு
பூவிற் பொலிகுழலாய் பூங்கை புகழவோ [வை
நாவிற் குதவு நயந்து.

இ - ள். பூவின் பொலி குழலாய் - பூவினால் விளங்குகின்ற கூந்தலையுடையவளே,—தீது அற்றோர் - குற்றமற்றவராகிய

பெரியோர்,—என்றும் முகமன் இயம்பாதவர் கண்ணும் - யாதொருநாளிலும் (தமக்கு) உபசாரவார்த்தைகளைச் சொல்லாதவரிடத்திலும்,—பொருள் சென்று கொடுப்பர் - (தமக்குக் கிடைத்த) பொருளைத் (தாமே) கொண்டுபோய்க் கொடுப்பார்;— பூங் கை - அழகிய கையானது,—புகழவோ - (தன்னைப்) புகழ்தற்கா,—துன்று சுவை நாவிற்கு நயந்து உதவும் - (தனக்குக் கிடைத்த மதுரமாகிய உணவை நாவினுக்கு விரும்பிக் (கொண்டுபோய்க்) கொடுக்கும், (புகழ்தற்கன்று.) எ - று.

இ-ம். பெரியோர் உபசாரவார்த்தை பேசாதவருக்கும் தாமே தேடிப்போய்ப் பொருள் கொடுப்பர். எ-ம். க

மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்
பேசுற்ற வின்சொற் பிறிதென்க—ஈசற்கு
நல்லோ னெறிசிலையோ நன்னுதா லொண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு.

இ - ள். நல் நுதால் - நல்ல நெற்றியை உடையவளே,— மாசு அற்ற நெஞ்சு உடையார் வன்சொல் இனிது - குற்றந்தீர்ந்த மனத்தையுடையவரது கடுஞ் சொல்லும் இனியதாகும்;— ஏனையவர் பேசுற்ற இன்சொல் பிறிது என்க - (குற்றம் பொருந்திய மனத்தையுடையவராகிய) பிறர் சொல்லிய இன் சொல்லும் கொடியதாகும் என்று அறிவாயாக.—ஈசற்கு விருப்பு - சிவபெருமானுக்கு விருப்பத்தைக் கொடுத்தது,— நல்லோன் எறி சிலையோ - நற்குணமுடையவராகிய சாக்கிய நாயனர் (அன்போடு) எறிந்த கல்லோ,—ஒள் கருப்பு வில்லோன் மலரோ - ஒள்ளிய கருப்பு வில்லையுடைய மன்மதன் (அன்பின்றி) எறிந்த பூவோ. எ - று.

இ-ம். மனநன்மையுடையோருடைய கடுஞ்சொல்லும் இன்பம் விளைக்கும்; மன நன்மையில்லாதவருடைய இன்சொல்லும் துன்பம் விளைக்கும். எ-ம். உ

தங்கட் குதவிலர்கைத் தாமொன்று கொள்ளினவர்
தங்கட் குரியவராற் றாங்கொள்க—தங்கநெடுங்
குன்றினாற் செய்தனைய கொங்கையா யாவின்பால்
கன்றினாற் கொள்ப கறந்து.

இ-ள். நெடும் தங்கக் குன்றினால் செய்து அனைய கொங்கையாய்-நெடிய பொன்மலையினாலே செய்தாற்போன்ற தனங்களையுடையவளே,—தங்கட்கு உதவிலர்கைத் தாம் ஒன்று கொள்ளின் - தங்களுக்கு உதவாதவர்களுடைய கையினின்றும் தாங்கள் ஒரு பொருளைக் கொள்ளவேண்டினால்,—அவர் தங்கட்கு உரியவரால் தாம் கொள்க-அவர்களுக்கு உரியவராலே (அப்பொருளைத்) தாங்கள் கொள்ளக்கடவர்கள்.—ஆவின் பால் கன்றினால் கறந்து கொள்ப-(தங்களுக்குக் கொடாத) பசுவினுடைய பாலை (அப் பசுவுக்குரிய) கன்றைக்கொண்டு கறந்து கொள்வார்கள். எ-று.

இ-ம். தமக்கு உதவாதவரிடத்தில் ஒருபொருள் பெறவேண்டின், அதனை அவருக்கு உரியவரைக்கொண்டு பெறல் வேண்டும். எ-ம். கூ

பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறாம்—பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடனீர் சென்று புயன்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு.

இ-ள். பிறர்க்கு உதவி செய்யார் பெருஞ்செல்வம் - பிறருக்கு உபகாரஞ்செய்யாதவருடைய பெரிய செல்வமானது,—வேறு - பிறிதேயாயினும்,—பிறர்க்கு உதவி ஆக்குபவர் பேறு ஆம்-பிறருக்கு உபகாரஞ் செய்பவருடைய செல்வமாகும்;—பிறர்க்கு உதவி செய்யாக் கருங்கடல் நீர் - பிறருக்கு உபகாரஞ் செய்யாத கரிய சமுத்திரத்துள்ள நீரை,—புயல்

சென்று முகந்து பிறர்க்குப் பெய்யாக் கொடுக்கும்-மேகமானது போய் மொண்டு வந்து பிறருக்குப் பெய்து கொடுக்கும். எ-று.

இ-ம். ஒருவர் உபகரிக்கும் பொருள் பிறர் பொருளே யாயினும், அவ்வுபகரிப்போர் பொருளாகவே கொள்ளப்படும். எ-ம். ௬

நீக்க மறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கி னவர்பெருமை நொய்தாகும்—பூக்குழலாய்
நெல்லி னுமிசிறிது நீங்கிப் பழமைபோற்
புல்லினுந் திண்மைநிலை போம்.

இ - ள். பூக் குழலாய் - பூக்களை முடித்த கூந்தலையுடையவளே,—நீக்கம் அறும் இருவர் நீங்கிப் புணர்ந்தாலும் - பிரிவு இல்லாத சிநேகர் இருவர் (பகைத்துச் சிறிது காலம்) பிரிந்து (முன்போலவே) கூடினாலும்,—நோக்கின் அவர் பெருமை நொய்து ஆகும் - பார்க்குமிடத்து அவருடைய பெருமை அற்பமாகும்.—நெல்லின் உமி சிறிது நீங்கிப் பழமைபோல் புல்லினும் - நெல்லினின்றும் உமியானது சிறிது நீங்கி முன்போலவே கூடினாலும்,—திண்மை நிலை போம் - (அதற்கு முன்னே முளைத்தற்குக் காரணமாக அந்நெல்லினிடத்து இருந்த) வலியினது நிலையானது கெட்டுப்போம். எ-று.

இ-ம். பகைத்துக் கூடினவருடைய நட்பு வலியுடையதன்று. எ-ம்.

காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்பவே—ஓதுகலை
எண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்
கண்ணிரண்டு மொன்றையே காண். [கருன்

இ - ள். ஓது எண்ணிரண்டு கலையும் ஒன்றும் மதி என் முகத்தாய் - புகழப்பட்ட பதினாறு கலைகளுஞ் சேர்ந்த சந்திரன் என்று சொல்லப்படும் முகத்தையுடையவளே,—காதல் மனை

யாளும் காதலனும் - அன்பையுடைய மனைவியும் கணவனும்,— மாறு இன்றித் தீது இல் ஒரு கருமமே செய்ப - (தம்முள்ளே) மாறுபாடில்லாமல் (ஒத்துக்) குற்றமில்லாத ஒரு கருமத்தையே செய்வர்.—கண் இரண்டும் ஒன்றையே நோக்கல் காண் - (நம்முடைய) இரண்டு கண்களும் (தம்முள்ளே மாறுபடாமல் ஒத்து) ஒருபொருளையே பார்த்தலை நீ பார். எ-று. தான் அசை.

இ-ம். கணவனும் மனைவியும் ஒத்துச் செய்யும் அறமே நிறைவேறும். எ-ம். சூ

கடலே யனையம்யாங் கல்வியா லென்னும்
அடலே றனையசெருக் காழ்த்தி—விடலே
முனிக்கரசு கையான் முகந்து முழங்கும்
பனிக்கடலு முண்ணப் படும்.

இ - ள். யாம் கல்வியால் கடலே அனையம் என்னும் - நாம் கல்வியறிவினாற் சமுத்திரத்தை ஒப்பேம் என்று கொள்கின்ற,— அடல் ஏறு அனைய செருக்கு ஆழ்த்தி விடல் - வலிமை பொருந்திய ஆண் சிங்கத்தினது செருக்கைப்போலுஞ் செருக்கிலே (உங்களை) அமிழ்த்திவிடாதிருங்கள்.—முழங்கும் பனிக்கடலும் - ஒலிக்கின்ற குளிர்ச்சி பொருந்திய சமுத்திரமும்,—முனிக்கு அரசு கையால் முகந்து உண்ணப்படும் - முனிவர்களுக்குத் தலைவராகிய அகத்தியமுனிவருடைய கையினால் மொண்டு பருகப்படும். எ - று. ஏ அசை.

இ-ம். எத்துணைப் பெருங் கல்வியுடையவரும், செருக்கடைவாராயின், வல்லவரொருவராலே தப்பாது வெல்லப்படுவர். எ-ம். எ

உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க—வெள்ளந்
தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு.

இ-ள். உள்ளம் கவர்ந்து எழுந்து ஓங்கு சினம் - மனத்தைத் தன்வயத்ததாக்கிக்கொண்டு எழுந்து வளர்கின்ற கோபத்தை,—காத்துக் கொள்ளும் குணமே குணம் என்க - அடக்கிக்கொள்கின்ற குணமே (அருமையாகிய) குணம் என்று அறியக் கடவாய்.—வெள்ளம் தடுத்தல் அரிதோ - (பெருகி வருகின்ற) வெள்ளத்தைக் (கரைகட்டித்) தடுத்தல் அரியதோ,—தடம் கரை பேர்த்து விடுத்தல் அரிதோ - (முன் கட்டப்பட்டிருந்த) பெரிய கரையை உடைத்து (அதனுள் அடங்கியிருந்த வெள்ளத்தைப் புறத்திலே செல்ல) விடுத்தல் அரியதோ,—விளம்பு - நீ சொல்வாயாக. எ - று. தான் அசை.

இ-ம். கோபத்தைச் செய்தல் எளிது, கோபத்தை அடக்கல் அரிது ஆதலின், அரியதைச் செய்தலே பெருமை. எ-ம். அ

மெலியோர் வலிய விரவலரை யஞ்சார்
வலியோர் தமைத்தா மருவிற்—பலியேல்
கடவு ளவிர்சடைமேற் கட்செவியஞ் சாதே
படர்சிறைப் புள்ளரசைப் பார்த்து.

இ-ள். மெலியோர் - வலியில்லாதவர்,—வலிய விரவலரை - வலியையுடைய பகைவருக்கு,—தாம் வலியோர் தமை மருவில் அஞ்சார் - தாம் (அவரினும்) வலியோரைச் சேர்ந்தால், பயப்படார்;—பலி * ஏல் கடவுள் அவிர் சடைமேல் கட்செவி - (அன்பருடைய) பூசையை ஏற்றுக்கொள்ளுஞ் சிவபெருமானுடைய விளங்குகின்ற சடையின்மேல் இருக்கின்ற பாம்பானது,—படர் சிறை அப் புள் அரசைப்பார்த்து அஞ்சாது - (தன்முன்) வந்த சிறைகளையுடைய அக்கருடனைப் பார்த்துப் பயப்படாது. எ - று. ஏ அசை.

இ-ம். பகைவர் வலியவராயவிடத்து, அவரினும் வலியவரைச் சேர்ந்தாற் பயமில்லை. எ-ம். க

---

* பலி - பிக்ஷையுமாம்.

தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறக்குறாஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகின்
நிறையிருளை நீக்குமே நின்று.

இ - ள். விழுமியோர் - மேலோர்,—தம் குறை தீர்வு உள்ளார் - தமது குறை நீங்குதலை நினையாராகி,—பிறர்க்கு உறும் வெம் குறை தளர்ந்து தீர்க்கிற்பார் - பிறருக்கு வந்த வெவ்விய குறையை மனந் தளர்ந்து நீக்குவார்.—திங்கள் - சந்திரனானவன்,—கறை இருளை நீக்கக் கருதாது - (தனது) களங்கமாகிய இருளை நீக்குதற்கு நினையாமல்,—மேல் நின்று உலகின் நிறை இருளை நீக்கும் - ஆகாயத்திலே நின்று உலகத்து நிறைந்த இருளை நீக்குவான். எ - று.

இ-ம். மேலோர் தங்குறையை நீக்காது பிறர்குறையை நீக்குவர். எ-ம். சுO

பொய்ப்புலன்க ளைந்துநோய் புல்லியர்பா லன்றியே
மெய்ப்புலவர் தம்பால் விளையாவாந்—துப்பிற்
சுழற்றுங்கொல் கற்றூணைச் சூறு வளிபோய்ச்
சுழற்றுஞ் சிறுபுன் றுரும்பு.

இ - ள். பொய்ப் புலன்கள் ஐந்தும் - பொய்யாகிய ஐந்து புலன்களும்,—புல்லியர் பால் அன்றி மெய்ப் புலவர் தம்பால் நோய் விளையா - மூடரிடத்தல்லாமல் மெய்யறிவுடையவ ரிடத்தே துன்பத்தைச் செய்யாவாம்.—சூறுவளி போய் - சுழல் காற்றானது சென்று,—துப்பின் சிறு புல் துரும்பு சுழற்றும் - (தன்) வலிமையினாலே, சிறிய இலகுவாகிய துரும்பை (எடுத்துச்) சுழற்றும்,—கல் தூணைச் சுழற்றும் கொல் - கல்லுக் கம்பத்தைச் சுழற்றுமா (சுழற்றமாட்டாது.) எ - று. ஏ, ஆம் அசை.

புலன்களைந்தாவன சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம் என்பனவாம்.

இ-ம். ஐம்புலன்களினால் மூடரேயன்றி மெய்யறிவுடையவர் துன்பமடையார். எ-ம். கக

வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பிற்
பொருந்துத லேபுதுமை—திருந்திழாய்
சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது
வீதலோ நிற்றல் வியப்பு.

இ-ள். திருந்து இழாய் - திருந்திய ஆபரணத்தை யுடையவளே,—வருந்தும் உயிர் - வருந்துகின்ற உயிரானது,— ஒன்பான் வாயில் உடம்பில் பொருந்துதலே புதுமை - ஒன்பது துவாரங்களையுடைய உடம்பிலே தங்குதலே ஆச்சரியம், (நீங்குதல் ஆச்சரியமன்று.)—சீத நீர் - குளிர்ச்சியாகிய நீரானது,— பொள்ளல் சிறு குடத்து நில்லாது வீதலோ - இல்லியையுடைய சிறிய குடத்திலே நில்லாது ஒழுகிப்போதலோ (ஆச்சரியம்,)— நிற்றல் வியப்பு - நிற்றலே ஆச்சரியமாகும். எ-று. தான் அசை.

இ-ம். ஒன்பது துவாரங்களையுடைய உடம்பிலே உயிர் நிற்றலுக்கன்றி நீங்குதலுக்கு ஆச்சரியமடைதல் பேதைமை. எ-ம். கஉ

பெருக்க மொடுசுருக்கம் பெற்றபொருட் கேற்ப
விருப்ப மொடுகொடுப்பர் மேலோர்—சுரக்கும்
மலையளவு நின்றமுலை மாதே மதியின்
கலையளவு நின்ற கதிர்.

இ-ள். மலை அளவு நின்ற சுரக்கும் முலை மாதே - மலையளவாக நின்ற (பால்) சுரக்கின்ற தனங்களையுடைய பெண்ணே,—மேலோர்-பெரியோர்,—பெருக்கமொடு சுருக்கம்

பெற்ற பொருட்கு எற்ப - வளர்தலேயும் குறைதலேயும் பொருந்திய செல்வத்திற்கு இசைய,—விருப்பமொடு கொடுப்பர் - ஆசையோடு கொடுப்பர்.—மதியின் கதிர் கலே அளவு நின்ற - சந்திரனுடைய கிரணங்கள் (வளர்தலேயுந் தேய்தலேயும் பொருந்திய) கலேகளினளவாக நின்றன. எ - று.

இ-ம். பெரியோர் தாம் பெற்ற செல்வத்திற் கேற்ப அதிகமாகவும் குறைவாகவுங் கொடுப்பர். எ-ம். கக

தொலேயாப் பெருஞ்செல்வத் தோற்றத்தோமென்று
தலேயா யவர்செருக்குச் சார்தல்—இலேயால்
இரைக்கும்வண் டூதுமல ரீர்ங்கோதாய் மேரு
வரைக்கும்வந் தன்று வளேவு.

இ - ள். இரைக்கும் வண்டு ஊதும் மலர் ஈர்ங்கோதாய் - ஒலிக்கின்ற வண்டுகள் ஊதுகின்ற பூக்களாலாகிய குளிர்ச்சி பொருந்திய மாலேயையுடையவளே,—தலேயாயவர் - தலேமையாகிய அறிவையுடையவர்,—தொலேயாப் பெருஞ்செல்வத் தோற்றத்தோம் என்று - (எக்காலத்தினும்) அழியாத பெரிய செல்வத்திலே பிறந்திருக்கின்ரேம் என்று,—செருக்குச் சார்தல் இலே-செருக்கை அடைதல் இல்லே.—மேரு வரைக்கும் வளேவு வந்தன்று - (எக்காலத்தினும் அசைவற்றிருந்த) மகாமேரு மலேக்கும் (ஒரு காலத்தில்) வளேவு வந்தது. எ-று. ஆல் அசை.

இ-ம். எத்துணேப் பெருஞ் செல்வத்துச்கும் அழிவு வருமென்றறிந்து அடங்குவோரே அறிவுடையோர். எ-ம். கச

இல்லானுக் கன்பிங் கிடம்பொரு ளேவன்மற்
றெல்லா மிருந்துமவற் கென்செய்யும்—நல்லாய்
மொழியிலார்க் கேது முதுநூ றெரியும்
விழியிலார்க் கேது விளக்கு.

இ - ள். நல்லாய்-நற்குணமுடையவளே,—இங்கு அன்பு இல்லானுக்கு - இவ்வுலகத்தில் அன்பில்லாதவனுக்கு,—இடம் பொருள் ஏவல் எல்லாம் இருந்தும் - இடமும் பொருளும் ஏவலுமாகிய இவை யெல்லாம் இருந்தும்,—அவற்கு என் செய்யும்-அவனுக்கு யாது பயனைச் செய்யும்,–மொழி இலார்க்கு முது நூல் ஏது - பேச்சில்லாதவராகிய ஊமைகளுக்குப் பழமையாகிய நூல் யாது பயனைச் செய்யும்,—தெரியும் விழி இலார்க்கு விளக்கு ஏது - பார்க்கின்ற கண்ணில்லாதவராகிய குருடருக்குத் தீபம் யாது பயனைச்செய்யும். எ-று. மற்று அசை.

இ-ம். அன்பில்லாதவன், இடம் பொருளேவல்களுடையவனாயினும், அவைகொண்டு தருமமும் புகழுஞ்செய்து கொள்ள மாட்டான். எ-ம். ௩௫

தம்மையுந் தங்க டலைமையும் பார்த்துயர்ந்தோர்
தம்மை மதியார் தமையடைந்தோர்—தம்மின்
இழியினுஞ் செல்வ ரிடர்தீர்ப்ப ரல்கு
கழியினுஞ்செல் லாதோ கடல்.

இ - ள். உயர்ந்தோர் - (அறிவொழுக்கங்களினால்) உயர்ந்தவர்கள்,—தமை அடைந்தோர் தம்மின் இழியினும் - தங்களை அடைந்தவர்கள் தங்களைப்பார்க்கினும் தாழ்ந்தவர்களாயினும்,—தம்மையும் தங்கள் தலைமையும் பார்த்துத் தம்மை மதியார் - தங்களையும் தங்களுடைய தலைமையையும் பார்த்துத் தங்களை மதியாதவர்களாகி,—செல்வர் இடர் தீர்ப்பர் - (அவர்கள் இருக்கும் இடத்துக்குப்) போய் (அவர்களுடைய) துன்பத்தை நீக்குவார்கள்.—கடல் அல்கு கழியினும் செல்லாதோ - (பெரிய) சமுத்திரமானது (தன்னை அடுத்த) சிறிய உப்பங்கழியிலும் போய்ப் பாயாதோ (போய்ப் பாயும்.) எ-று. அல்கல்-சுருங்கல்.

இ-ம். மேலோர், தம்மிற் றாழ்ந்தவரையும், செருக்கின்றி அவரிடந்தேடிச் சென்று, பாதுகாப்பர். எ-ம். ௧௬

எந்தைநல் கூர்ந்தா னிரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் மீகை மறுப்பரோ—பைந்தொடீ
நின்று பயனுதவி நில்லா வரம்பையின்கீழ்க்
கன்று முதவுங் கனி.

இ - ள். பைந்தொடீ - பசும்பொன்னாலாகிய வளையல்களை யுடையவளே,—எந்தை இரப்பார்க்கு ஈந்து நல்கூர்ந்தான் என்று - எங்கள் பிதா இரப்பவருக்குக் கொடுத்துத் தரித்திர னானான் என்று,—அவன் மைந்தர் தம் ஈகை மறுப்பரோ - அவனுடைய புத்திரர் தமது கொடையை விடுவாரோ (விடார்.)—நின்று பயன் உதவி நில்லா அரம்பையின் கீழ்க் கன்றும் கனி உதவும் - (முன்னே அழிவில்லாமல்) நின்று கொண்டு (பழமாகிய) பயனைக் கொடுத்து (அதனாலே) அழிவை யடைந்த வாழைமரத்தின்கீழ் நிற்கின்ற அதன் கன்றும் பழத் தைக் கொடுக்கும். எ - று.

இ-ம். தந்தை கொடையினாலே தரித்திரனானானென்று அவன் புத்திரர் கொடையை விடார். எ-ம். கஎ

இன்சொலா லன்றி யிருநீர் வியனுலகம்
வன்சொலா லென்று மகிழாதே—பொன்செய்
அதிர்வளையாய் பொங்கா தழற்கதிராற் றண்ணென்
கதிர்வரவாற் பொங்குங் கடல்.

இ - ள். பொன் செய் அதிர் வளையாய் - பொன்னாலே செய்யப்பட்ட ஒலிக்கின்ற வளையல்களையுடையவளே,—இரு நீர் வியன் உலகம் - பெரிய கடல் சூழ்ந்த பரந்த உலகத்தி லுள்ளவர்,—இன்சொலால் அன்றி வன்சொலால் என்றும் மகிழாது - இன்சொல்லினாலல்லாமற் கடுஞ்சொல்லினால் எந் நாளும் மகிழ்ச்சியடையார்.—கடல் தண் என் கதிர் வரவால்

பொங்கும் - கடலானது குளிர்ச்சி பொருந்திய கிரணங்களை யுடைய சந்திரன் வருகையினலே பொங்கும்; (அதுவன்றி),— அழற்கதிரால் பொங்காது - சூடு பொருந்திய கிரணங்களை யுடைய சூரியன் வருகையினலே பொங்காது. எ - று. ஏ அசை.

இ-ம். இன்சொல்லின லன்றி வன் சொல்லினல் ஒருவரும் மகிழ்ச்சியடையார். எ-ம். கஅ

நல்லோர் வரவா னகைமுகங்கொண் டின்புறீஇ
அல்லோர் வரவா னழுங்குவார்—வல்லோர்
திருந்துந் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்துஞ் சுழல்கால் வர.

இ - ள். வல்லோர் - (கல்வியறிவில்) வல்லவர்,—நல்லோர் வரவான் முக நகை கொண்டு இன்பு உறீஇ - நல்லவருடைய வருகையினலே முகமலர்ச்சி கொண்டு இன்பத்தை அடைந்து,—அல்லோர் வரவான் அழுங்குவார் - தீயவருடைய வருகையினலே துன்பத்தை அடைவார்.—தேமா - தேமாமரமானது,—தென்றல் வரத் தளிர் காட்டித் திருந்தும் - தென்றற் காற்று வரத் தளிரைக் காட்டிச் சிறப்புற்றிருக்கும்,—சுழல்கால் வர வருந்தும் - சுழல்காற்று வர வருந்தும். எ - று.

இ-ம். கல்வியறிவுடையவருக்கு, நல்லோர் வரவினலே இன்பமும், தீயோர் வரவினலே துன்பமும் விளையும். எ-ம். கசு

பெரியவர்தந் நோய்போற் பிறர்நோய்கண் டுள்ளம்
எரியி னிழுதாவ ரென்க—தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்.

இ - ள். தெரி இழாய் - ஆராய்ந்த ஆபரணத்தையுடையவளே,—பெரியவர் - (அறிவொழுக்கங்களிற்) பெரியவர்,—பிறர்நோய் கண்டு - பிறருக்கு வந்த நோயைக் கண்டு,—தம்

நோய்போல் உள்ளம் எரியின் இழுது ஆவர் என்க - தமக்கு வந்த நோய்போல நினைத்து மனம் அக்கினியிலே பட்ட நெய் போல உருகுவார் என்று அறியக்கடவாய்.—கண் மண்டு பிணி யால் வருந்து பிற உறுப்பைக் கண்டு கலுழும் - கண்களானவை நெருங்கிய வியாதியினால் வருந்துகின்ற மற்றை அவயவங்களைக் கண்டு அழும். எ - று. ஏ அசை.

இ-ம். பிறருக்கு வருந்துன்பத்தைக் கண்டபோது இரங்குதல் பெரியோருக்கு இயல்பாகும். எ-ம். உo

எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும்
எழுத்தறிவார்க் காணி னிலையாம்—*எழுத்தறிவார்
ஆயும் கடவு ளவிர்சடைமுன் கண்டளவில்
வீயுஞ் சுரநீர் மிகை.

இ - ள். எழுத்து அறியார் கல்விப் பெருக்கம் அனைத்தும்- இலக்கணநூலை அறியாதவருடைய மற்றைக் கல்வியினது பெருக்க முழுதும்,—எழுத்து அறிவார்க் காணின் இலை - இலக் கணநூலை அறிந்தவரைக் கண்டால் இல்லாமற்போகும்.—சுர நீர் மிகை - ஆகாய கங்கையினுடைய பெருக்கமானது,—எழு த்து அறிவார் ஆயும் கடவுள் அவிர் சடை முன் கண்ட அள வில் வீயும் - எழுத்துக்களினியல்பை அறியும் பெரியோர் ஆராய்கின்ற சிவபெருமானது விளங்குகின்ற சடையைத் தன் முன் கண்டவளவிலே, நீங்கிவிடும். எ - று. ஆம் அசை.

இ-ம். இலக்கண நூலுணர்ச்சி யில்லாதவருடைய கல்வி இலக் கண நூலுணர்ச்சியுடையாரெதிரே பயன்படாது. எ-ம். உக

ஆக்கு மறிவா னலது பிறப்பினான்
மீக்கொ ளுயர்விழிவு வேண்டற்க—நீக்கு
பவரா ரரவின் பருமணிகண் டென்றுங்
கவரார் கடலின் கடு.

---

*எழுத்து அறிதல்-பஞ்சாக்கரத்தின் (மெய்ப்பொரு)ளுணர்தல்.

இ - ள். மீக்கொள் உயர்வு இழிவு - மேலாகக் கொள்கின்ற உயர்வையும் (கீழாகக் கொள்கின்ற) இழிவையும்,—ஆக்கும் அறிவான் அலது பிறப்பினன் வேண்டற்க - (நற்குணங்களை) உண்டாக்குகின்ற கல்வியறிவினாலல்லாமல், சாதியினாலே விரும்பாதிருக்கக்கடவீர்.—அரவின் பரு மணி கண்டு நீக்குபவர் ஆர் - (நஞ்சையுடைய) பாம்பினிடத்து உண்டாகிய பருத்த மாணிக்கத்தைக் கண்டு நீக்குவோர் யாவர்?!(ஒருவருமில்லை.)—கடலின் கடு என்றும் கவரார் - பாற்கடலினிடத்து உண்டாகிய நஞ்சை ஒருநாளும் கொள்ளார். எ - று.

இ-ம். உயர்குலத்தனாயினும் அறிவில்லாதவனை இழிந்தவனாகவும், இழிகுலத்தானாயினும் அறிவுடையவனை உயர்ந்தவனாகவும் கொள்ளவேண்டும். எ-ம். உஉ

பகர்ச்சி மடவார் பயிலநோன் பாற்றல்
திகழ்ச்சி தருநெஞ்சத் திட்பம்—நெகிழ்ச்சி
பெறும்பூரிக் கின்றமுலைப் பேதாய் பலகால்
எறும்பூரக் கற்குழியு மே.

இ - ள். பூரிக்கின்ற முலைப் பேதாய் - விம்முகின்ற தனங்களையுடைய பெண்ணே,—மடவார் பகர்ச்சி பயில - பெண்கள் (தவஞ் செய்யும் ஒருவன் பக்கத்தில்) வாய்ப்பேச்சோடு பழகிக் கொண்டு வந்தாலும்,—நோன்பு ஆற்றல் திகழ்ச்சி தரும் நெஞ்சத்திட்பம் நெகிழ்ச்சி பெறும் - தவத்தைச் செய்தலில் விளங்குகின்ற (அவனுடைய) மனத்தினது உறுதியானது (நாளுக்கு நாள்) தளர்ந்துபோகும்.— பல கால் எறும்பு ஊரக் கல் குழியும் - பலதரம் சிற்றெறும்புகள் ஊர்ந்துகொண்டு வந்தாலும், கருங்கல்லும் குழிந்துபோகும். எ - று. ஏ அசை.

இ - ள். பெண்களது வாய்ப்பேச்சோடு பழகினும், தவஞ்செய்வோனுக்கு மனவுறுதி கெடும். எ-ம். உ௩

உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே—வண்டுமலர்ச்
சேக்கை விரும்புஞ் செழும்பொழில்வாய் வேம்பன்
காக்கை விரும்புங் கனி. [ன்று

இ - ள். இங்கு ஒருவர்க்குக் குணம் உண்டு எனினும் - இவ்வுலகத்திலே ஒருவருக்கு நற்குணம் உள்ளதாயினும்,—கீழ் கொண்டு புகல்வது அவர் குற்றமே - கீழோர் எடுத்துப் பேசுவது அவருடைய குற்றமேயாகும்.—செழும் பொழில்வாய் - செழுமையாகிய சோலையினிடத்தே,—மலர்ச் சேக்கை வண்டு விரும்பும் - பூவாகிய மெத்தையை வண்டுகள் விரும்பும்;— வேம்பு அன்றோ காக்கை விரும்பும் கனி - வேப்பம்பழமன்றோ காக்கைகள் விரும்பும் பழம். எ - று.

இ-ம், ஒருவனிடத்துள்ள நற்குணத்தையே மேலோர் எடுத்துப் பேசுவர், தீக்குணத்தையே கீழோர் எடுத்துப் பேசுவர். எ-ம், உச

கல்லா வறிவிற் கயவர்பாற் கற்றுணர்ந்த
நல்லார் தமதுகன நண்ணாரே—வில்லார்
கணையிற் பொலியுங் கருங்கண்ணாய் நொய்தாம்
புணையிற் புகுமொண் பொருள்.

இ - ள். வில் ஆர் கணையின் பொலியும் கருங் கண்ணாய் - வில்லோடுகூடிய அம்பைப்போலப் (புருவத்தோடு கூடி) விளங்குகின்ற கருமையாகிய கண்களையுடையவளே,—கல்லா அறிவின் கயவர்பால் - கல்லாத அறிவையுடைய மூடரிடத்திலே (சேர்ந்தால்,)—கற்று உணர்ந்த நல்லார் தமது கனம் நண்ணார் - கற்றறிந்த நல்லோர் தமது பெருமையை இழப்பர்.—புணையில் புகும் ஒள் பொருள் நொய்து ஆம் - (கனமில்லாத) தெப்பத்திலே சேர்ந்த கனமுடைய பொருள் இலகுவாகும். எ - று.

இ-ம். கற்றறிந்தவர் மூடரிடத்தே சென்றால் தமது பெருமையை இழப்பர். எ-ம். உரு

உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்
கடலி பெருமை கடவார்—மடவரால்
கண்ணளவாய் நின்றதோ காணுங் கதிரொளிதான்
விண்ணளவா யிற்றோ விளம்பு.

இ-ள். மடவரால் - இளம்பெண்ணே,—ஒள் புலவர் உடலின் சிறுமை கண்டு - ஒள்ளிய புலவருடைய சரீரத்தின் சிறுமையைக் கண்டு,—கல்விக் கடலின் பெருமை கடவார் - (அவரது) கல்வியாகிய கடலின் பெருமையை (ஒருவரும்) கடக்கமாட்டார்.—கதிர் காணும் ஒளி - சூரியனுடைய ஒளியோடு கூடிக் காண்கின்ற கருமணி யொளியானது,—கண் அளவு ஆய் நின்றதோ? - (தனக்கிடமாகிய சிறிய) கண்ணினளவாக அடங்கி நின்றதோ?,—விண் அளவு ஆயிற்றோ விளம்பு - (தான் காண்கின்ற பெரிய) ஆகாயத்தினளவாக வியாபித்து நின்றதோ? நீ சொல்வாயாக. எ-று. தான் அசை.

இ-ம். உருவத்தாற்சிறியவரும் அறிவினாற் பெரியவராயிருப்பர். எ-ம். உசு

கைம்மா றுகவாமற் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மா லியலுதவி தாஞ்செய்வர்—அம்மா
முலைக்கு மெயிறு முதிர்சுவைநா விற்கு
விளைக்கும் வலியனதா மென்று.

இ-ள். கற்று அறிந்தோர் - கற்றறிந்தவர்,—கைம்மாறு உகவாமல் - பிரதியுபகாரத்தை விரும்பாமல்,—மெய் வருந்தித் தம்மால் இயல் உதவி தாம் செய்வர் - சரீரம் வருந்தித் தம்மால் இயன்ற உதவிகளைத் தாமே செய்வர்.—முலைக்கும்

எயிறு - முளைக்கின்ற பற்களானவை,—நாவிற்கு - (தமக்கு ஒருபகாரமுஞ் செய்தற்கு இயலாத) நாக்குக்கு,—வலியன தாம் மென்று முதிர் சுவை விளைக்கும் - கடினமாகிய தின் பண்டங்களைத் தாமே மென்று கொடுத்து நிறைந்த சுவையை உண்டாக்கும். எ - று. அம்மா வியப்பிடைச்சொல்.

இ-ம். அறிவுடையவர் கைம்மாறு வேண்டாமலே பிறருக்குத் தம்மால் இயன்ற உதவிகளைச் செய்வர், எ-ம். உஎ

முனிவினு நல்குவர் மூதறிஞ ருள்ளக்
கனிவினு நல்கார் கயவர்—நனிவிளைவில்
காயினு மாகுங் கதலிதா னெட்டிபழுத்
தாயினு மாமோ வறை.

இ - ள். மூதறிஞர் முனிவினும் நல்குவர் - பேரறிவுடையவர் கோபமுள்ள காலத்திலும் கொடுப்பர்;—கயவர் உள்ளக் கனிவினும் நல்கார் - மூடர் மனமகிழ்ச்சி உள்ள காலத்திலும் கொடார்;—கதலி நனி விளைவு இல் காயினும் ஆகும் - வாழையானது மிக முற்றுதலில்லாத காயினுலும் பயன்படும்;—எட்டி பழுத்து ஆயினும் ஆமோ அறை - எட்டியானது பழுத்தாலும் பயன்படுமோ? நீ சொல்வாயாக. எ - று.

இ-ம். அறிவுடையவர் கோபத்தினுங் கொடுப்பர், மூடர் மகிழ்ச்சியினுங் கொடார். எ-ம். உஅ

உடற்கு வருமிடர்நெஞ் சோங்குபரத் துற்றோர்
அடுக்கு மொருகோடி யாக—நடுக்கமுறார்
பண்ணிற் புகலும் பனிமொழியா யஞ்சுமோ
மண்ணிற் புலியைமதி மான்.

இ - ள். பண்ணின் புகலும் பனிமொழியாய் - பண்ணைப் போலப் பேசுகின்ற குளிர்ச்சி பொருந்திய சொல்லையுடைய

வளே,—நெஞ்சு ஓங்கு பரத்து உற்ரோர் - (தம்முடைய) மனம் உயர்ந்த பதியினிடத்தே அழுந்தப்பெற்ற ஞானிகள்,—உடற்கு வரும் இடர் அடுக்கும் ஒருகோடி ஆக - (தம்முடைய) சரீரத்துக்கு வருந்துன்பங்கள் அடுக்கிச் சொல்லப்படும் ஒரு கோடி யளவினவாக இருந்தாலும்,—நடுக்கம் உரோர் - அச்ச மடையார்.—மதி மான் மண்ணில் புலியை அஞ்சுமோ - சந்திர னிடத்தில் இருக்கின்ற மானனது பூமியில் இருக்கின்ற புலி களுக்குப் பயப்படுமோ? (பயப்படாது.) எ - று.

இ-ம். கடவுளிடத்து மனமழுந்தப்பெற்றவர் எத்துணைப் பெருந் துன்பங்களுக்கும் அஞ்சார். எ-ம். ௨௯

கொள்ளுங் கொடுங்கூற்றங் கொல்வான் குறுகுதன்முன்
உள்ளங் கனிந்தறஞ்செய் துய்கவே—வெள்ளம்
வருவதற்கு முன்ன ரணைகோலி வையார்
பெருகுதற்க ணென்செய்வார் பேசு.

இ - ள். கொள்ளும் கொடும் கூற்றம் கொல்வான் குறுகு தல் முன் - (உயிரைக்) கொண்டு செல்கின்ற கொடுமையாகிய யமனனவன் கொல்லும்படி அணுகுதற்கு முன்னே,—உள்ளம் கனிந்து அறம் செய்து உய்க - மனங்கரைந்து தருமங்களைச் செய்து பிழைக்கக்கடவாய்.—வெள்ளம் வருவதற்கு முன்னர் அணை கோலி வையார் - வெள்ளம் வருவதற்கு முன்னே கரையைக் கட்டி வையாதவர்,—பெருகுதற்கண் என்செய் வார் பேசு - (அது) பெருகி வரும்பொழுது யாது செய்வார்? நீ சொல்வாயாக. எ - று. ஏ அசை.

இ-ம். மரணம் வருமுன்னே தருமத்தை விரைந்து செய்தல் வேண்டும். எ-ம். ௩௰

பேரறிஞர் தாக்கும் பிறர்துயரந் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார்—நேரிழாய்
மெய்சென்று தாக்கும் வியன்கோ லடிதன்மேற்
கைசென்று தாங்குங் கடிது.

இ - ள். நேர் இழாய் - தகுதியாகிய ஆபரணத்தையுடையவளே,—பேர் அறிஞர் - பெரிய அறிவையுடையவர்,—தாக்கும் பிறர் துயரம் வீரமொடு தாங்கி - வருத்துகின்ற பிறருடைய துன்பத்தை வீரத்தோடு தாம் ஏற்றுக்கொண்டு,—காக்க விரைகுவார் - (அவரைப்) பாதுகாத்தற்கு விரைந்து போவார்.—மெய் சென்று தாக்கும் வியன் கோல் அடி - உடம்பிலே போய்த் தாக்குகின்ற பெரிய கோலினுடைய அடியை,—கை கடிது சென்று தன்மேல் தாங்கும் - கையானது சீக்கிரம் போய்த் தன்மேல் (படும்படி) ஏற்றுக்கொள்ளும். எ - று. ஏ அசை.

இ-ம். பேரறிவுடையோர் பிறருக்கு வருந்துன்பத்தை விரைந்து நீக்குவர். எ-ம். ருக

பன்னும் பனுவற் பயன்றே ரறிவிலார்
மன்னு மறங்கள் வலியிலவே—நன்னுதால்
காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
தாழொன் றிலதாயிற் றான்.

இ - ள். நல் நுதால் - நல்லநெற்றியையுடையவளே,—பன்னும் பனுவல் பயன் தேர் அறிவு இலார் - சொல்லப்படுகின்ற நூல்களினது பொருளை அறியும் விவேகமில்லாதவருடைய,—மன்னும் அறங்கள் வலி இலவே - மிகுந்த தருமங்கள் உறுதியில்லாதனவேயாம்.—காழ் ஒன்று உயர் திண் கதவு - வயிரம் பொருந்திய உயர்ந்த வலிய கதவானது,—

தாழ் ஒன்று இலது ஆயின் வலி உடைத்தோ - ஒரு தாழ் இல்லாததாயின் உறுதியை உடைத்தாகுமோ? (உடைத்தாகாது.) எ - று. தான் அசை.

இ-ம். விதிவிலக்குகளைப் பகுத்தறியும் அறிவில்லாதவர் செய்யுந் தருமங்கள் பயன்படா. எ-ம். கூஉ

எள்ளா திருப்ப விழிஞர்போற் றற்குரியர்
விள்ளா வறிஞா்து வேண்டாரே—தள்ளாக்
கரைகாப் புளதுநீர் கட்டுகுள மன்றிக்
கரைகாப் புளதோ கடல்.

இ-ள். இழிஞர் எள்ளாது இருப்பப் போற்றற்கு உரியர் - அறிவில்லாத சிறியோர் (தம்மைப் பிறர்) இகழாதிருக்கும்படி காக்கப்படுதற்கு உரியவராவர்;—விள்ளா அறிஞர் அது வேண்டார் - நீங்காத அறிவையுடைய பெரியோர் அங்ஙனங் காக்கப் படுதலை வேண்டார்;—நீர் கட்டு குளம் தள்ளாக் கரை காப்பு உளது - நீரைக் கட்டிவைக்கின்ற (சிறிய) குளமே தள்ளப் படாத கரை காவலாக உள்ளது;—அன்றிக் கடல் கரை காப்பு உளதோ - அதுவல்லாமற் (பெரிய) கடலானது கரை காவலாக உள்ளதோ? (உள்ளதன்று.) எ - று.

இ-ம். பிறர் இகழாவண்ணங் காக்கப்படுதல் சிறியோருக்கன்றிப் பெரியோருக்கு வேண்டுவதில்லை. எ-ம். கூகூ

அறிவுடையா ரன்றி யதுபெறார் தம்பாற்
செறிபழியை யஞ்சார் சிறிதும்—பிறைநுதால்
வண்ணஞ்செய் வாள்விழியே யன்றி மறைகுருட்டுக்
கண்ணஞ்சு மோருவிளைக் கண்டு.

இ - ள். பிறை நுதால் - பிறைபோலும் நெற்றியையுடையவளே,—அறிவு உடையார் அன்றி - அறிவுடையவரேயல்

லாமல்,—அது பெறார் - அவ்வறிவைப் பெறாத மூடர்,—தம்பால் செறி பழியைச் சிறிதும் அஞ்சார் - தம்மிடத்தில் நெருங்கி வரும் பழிக்குச் சிறிதும் அஞ்சார்;—வண்ணம் செய் வாள் விழியே அன்றி - அழகு செய்கின்ற ஒளியையுடைய கண்களே யல்லாமல்,—மறை குருட்டுக் கண் - (ஒளி) மறைந்த குருட்டுக் கண்களானவை,—இருளைக் கண்டு அஞ்சுமோ - இருட்டைக் கண்டு அஞ்சுமோ? (அஞ்சா.) எ - று.

இ-ம். பழிக்கு அறிவுடையோர் அஞ்சுவர், மூடர் அஞ்சார். எ-ம்.

கற்ற வறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்
மற்றையர்தா மென்று மதியாரே—வெற்றிநெடும்
வேல்வேண்டும் வாள்விழியாய் வேண்டா புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம்.

இ - ள். வெற்றி நெடும் வேல் வேண்டும் வாள் விழியாய் - வெற்றியையுடைய நெடிய வேற்படை விரும்புகின்ற ஒளிபொருந்திய கண்களையுடையவளே,— கற்ற அறிவினரை மேன்மக்கள் காமுறுவர் - (நூல்களைக்) கற்ற அறிவுடையவரை மேலோர் விரும்புவர்;—மற்றையர் என்றும் மதியார்- கீழோர் (அவரை) எப்போதும் மதியார்;—வாழைப் பழம் பால் வேண்டும் - வாழைப்பழத்தைத் (தித்திப்பாகிய) பாலானது அவாவும்;—புளிங்காடி வேண்டா - புளிப்பாகிய காடிநீரானது (அதனை) அவாவாது. எ - று. தாம் ஏ அசை.

இ-ம். கல்வியறிவுடையவரை மேன்மக்களே விரும்புவர், கீழ்மக்கள் விரும்பார். எ-ம்.

௬௫

தக்கார்க்கே யீவர் தகார்க்களிப்பா ரில்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோர்—எக்காலும்
நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய்.

இ - ள். தக்கார்க்கே* ஈவர் தகார்க்கு அளிப்பார் இல் என்று - யோக்கியருக்கே கொடுப்பார் அயோக்கியருக்குக் கொடுப்பவர் இல்லை யென்று அறிந்து,—விழுமியோர் மிக்கார்க்கு உதவார் - மேலோர் நன்னெறிகடந்தவராகிய அயோக்கியருக்குக் கொடார்.—எக்காலும் நீர் நெல்லுக்கு இறைப்பதே அன்றி - எக்காலத்தும் நீரை நெற்பயிருக்கே இறைப்பதல்லாமல்,—காட்டு முளி புல்லுக்குப் போய் இறைப்பரோ - காட்டினிடத்தே உலரும் புல்லுக்குப் போய் இறைப்பாரோ? (இறையார்.) எ - று.

இ-ம். மேலோர் யோக்கியருக்கன்றி அயோக்கியருக்குக் கொடார். எ-ம். ௩௬

பெரியோர்முற் றன்னைப் புனைந்துரைத்த பேதை
தரியா துயர்வகன்று தாழும்—தெரியாய்கொல்
பொன்னுயர்வு தீர்த்த புணர்முலையாய் விந்தமலை
தன்னுயர்வு தீர்ந்தன்று தாழ்ந்து.

இ - ள். பொன் உயர்வு தீர்த்த புணர் முலையாய் - இலக்குமியுடைய உயர்வை (அழகினாலே) நீக்கிய நெருங்கிய தனங்களையுடையவளே,—பெரியோர் முன் தன்னைப் புனைந்து உரைத்த பேதை - பெரியோர் முன்னே தன்னைச் சிறப்பித்துச்சொல்லிய மூடன்,—உயர்வு தரியாது அகன்று தாழும் - உயர்வைப் பெறாது இழந்து தாழ்வையடைவன்;—விந்தமலை தாழ்ந்து தன் உயர்வு தீர்ந்தன்று - (அகத்தியமுனிவர் முன்னே தன்னைச் சிறப்பித்துச் சொல்லிய) விந்தமலையானது (அவர் கையினாலே ஊன்றப் பாதாளத்திலே) தாழ்ந்து தன்னுடைய உயர்வு நீங்கியது;—தெரியாய் கொல் - (நீ அதனை) அறியாயோ. எ - று.

* 'தக்கார்க்கே' என்னும் வெண்பாப் பொதுவாய ஈகையைக் குறியாது சிறப்பாய தானத்தைக் குறித்ததென்க.

இ-ம். பெரியோரெதிரே தன்னைப் புகழ்ந்துரைத்தவன் தாழ்வையடைவன். எ-ம். ௬௭

நல்லார் செயுங்கேண்மை நாடோறு நன்றாகும்
அல்லார் செயுங்கேண்மை யாகாதே—நல்லாய்கேள்
காய்முற்றிற் றின்றீங் கனியா மிளந்தளிர்நாள்
போய்முற்றி னென்னாகிப் போம்.

இ-ள். நல்லாய் கேள் - நற்குணத்தை யுடையவளே கேட்பாயாக,—நல்லார் செயும் கேண்மை நாடோறும் நன்று ஆகும் - நல்லோர் செய்யுஞ் சிநேகமானது தினந்தோறும் நன்றாகி வளரும்;—அல்லார் செயும் கேண்மை ஆகாது - தீயோர் செய்யுஞ் சிநேகமானது நல்லதாகாது;—காய் முற்றின் தின் தீம் கனி ஆம் - காயானது (நாள் சென்று) முற்றினால் தின்னுதற்குரிய மதுரமாகிய கனியாகும்;—இளந் தளிர் நாள் போய் முற்றின் என் ஆகிப் போம் - இளந்தளிரானது நாள் சென்று முற்றினால் யாதாகிப் போகும். எ - று. ஏ அசை.

இ-ம். நல்லோர் நட்பு நாள் செல்லச் செல்ல இனிதாகும்; தீயோர் நட்பு அங்ஙனமாகாது கெடும். எ-ம். ௬௮

கற்றறியார் செய்யுங் கடுநட்புந் தாங்கூடி
உற்றுழியுந் தீமைநிகழ் வுள்ளதே—பொற்றொடீ
சென்று படர்ந்த செழுங்கொடிமென் பூமலர்ந்த
அன்றேற மணமுடைய தாம்.

இ - ள். பொன் தொடீ - பொன்னாலாகிய வளையல்களை யுடையவளே,—கற்று அறியார் செய்யும் கடு நட்பும் - கற்றறியாதவர்கள் செய்கின்ற மிகுதியாகிய சிநேகமும்,—தாம் கூடி உற்ற உழியும் - (நெடுங்காலம்) தாங்கள் கூடி இருந்தவிடத்

தும்,—தீமை நிகழ்வே உள்ளது - தீங்கு விளைதலே உள்ளதா கும்,—சென்று படர்ந்த செழுங் கொடி மென் பூ - போய்ப் படர்ந்த செழுமையாகிய கொடியினது மிருதுவாகிய பூவா னது,—மலர்ந்த அன்றே மணம் உடையது ஆம் - மலர்ந்த அன் றைக்கு மாத்திரமே வாசனையை உடையதாகும். எ - று.

இ-ம். மூடருடைய நட்புத்தொடக்கத்திலே நன்றாயினும், பின்பு தீங்கு விளைவிக்கும். எ-ம். ௩௯

பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னு மறிஞரைத்தா மற்றொவ்வார்—மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே யதுபுனையாக்
காணுங்கண் ணொக்குமோ காண்.

இ - ள். பொன்னே - இலக்குமியைப் போன்றவளே,— பொன் அணியுங் வேந்தர் - பொன்னாலாகிய ஆபரணத்தை அணியும், அரசர்,—புனையாப் பெருங் கல்வி மன்னும் அறி ஞரை ஒவ்வார் - (அதனை) அணியாத பெரிய கல்விப்பொருள் நிலைபெற்ற விவேகிகளுக்கு ஒப்பாகார்;—மின்னும் அணி பூணும் பிற உறுப்பு - விளங்குகின்ற ஆபரணத்தை அணிந்து கொள்கின்ற (கை கால் முதலிய) மற்றை அவயவங்களான வை,—அது புனையாக் காணும் கண் ஒக்குமோ - அதனை அணி யாத பார்க்கின்ற கண்களுக்கு ஒப்பாகுமோ (ஒப்பாகா.) எ-று. தாம், மற்று அசை. காண் முன்னிலையசை.

இ-ம். வித்துவான்களுக்கு அரசர்களும் ஒப்பாகார். எ-ம். ௪0

நன்னெறியுரை முற்றிற்று.

---

